# சிந்தனைக் கதிர்கள்

பாடல்கள்

தமிழாக்கம்:
பண்டிதரத்நம்



ஸ்டார் பிரசுரம்
பாலக்கரை, திருச்சிறுப்பள்ளி (H. O.)

★ NO· 18. TRANSLATION FROM ENGLISH MORAL POEMS




# சிந்தனைக் கதிர்கள்

பாடல்கள்

தமிழாக்கம்:

பண்டித ரத்நம்





ஸ்டார் பிரசுரம்
பாலக்கரை, திருச்சினாப்பள்ளி (H. O.)

# முன்னுரை

" கால நதியின் கதியதனில்
கடவுளாணை காண்பீரேல்
ஞால மீது சுகமெல்லா
நாளு மடைந்து வாழ்வீரே "
—கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை.

இது ஒரு நீதியை எடுத்து விளக்கும் பாட்டு. அதேபோல, ஆங்கிலத்தில் பல ஆசிரியர்கள் அருமையான நீதிப் பாடல்களை இயற்றியிருக்கிறார்கள், ஷேக்ஸ்பியர், ஜான்சன், கார்லைல், பேகன், பிரௌனிங், லாங்பெல்லோ, வேர்ட்ஸ்வொர்த், பர்ண்ஸ், போமெண்டு, பைரன், கிங்ஸ்லி, ஷெர்லி, கூபர், ராலி முதலிய கவிஞர்கள் அருமையான நீதிகளை என்றும் நிலைக்கும் பாடல்களில் அமைத்திருக்கிறார்கள். நமது அருட் கவிஞர் பண்டித ரத்நம் அவர்கள் ஆங்கிலப் பாடல்களைத் தமிழாக்கித் தந்திருக்கிறார்கள். மிக எளிய நடையில் அமைந்திருக்கும் முப்பது பாடல்களும், ஆழ்ந்த உண்மைகளைக் கொண்டு, வாசகர்களின் நெஞ்சில் சாந்தியை நிலவச்செய்யும் ஆற்றல் பெற்றுள்ளன. இதே போல, அடுத்த பிரசுரம்— 'சோகப்பாலம்' முதலிய பாடல்கள்.

16—4—1945. வி. ஆர். எம். செட்டியார், பி. ஏ.

# பொருளடக்கம்

# சிந்தனைக் கதிர்கள்



## 1. நாடக சாலை

நானிலம் அனைத்தும் நாடக சாலை
வாழ்வெனப் படுவதும் மாய நாடகம்
ஆடவர் மகளிர் அனைவரும் நடிகர்
வேடம் பூணுவர் வெளியே வருவர்
ஆட்டம் பரமாய் ஆடுவர் பாடுவர்
பற்பல உருவிலும் முற்பட வேண்டும்
ஏழு பருவங்கள் எவர்க்கும் உண்டு
தாயின் மடியில் வாயைத் திறந்து
பசிக்கழு தரற்றும் சிசுப்பொழு தொன்று
நிறைதரும் அழகை நேர்படத் திருத்திச்
சிறுபை தூக்கிச் சிணுங்கிய முகத்தொடும்
பள்ளிக்குச் செல்லும் பாலனும் ஒன்று
கடுமொழிக் காற்றால் கனிந்த நெருப்பென
மனைவியைக் கனைக்கும் வாலிபன் ஒன்று
குமிழென முகிழ்க்கும் புகழினைக் குறித்து
வீர னாகிப் பீரங்கி முனையில்
உடனே பகைத்துத் திடப்போர் புரிந்து
வீர சுவர்க்கம் பெற்றிட வெண்ணிக்
காதலி உகுக்கும் கண்ணீர் துடைத்துக்

கையிலும் கதுப்பிலும் பையச் சுவைத்து
வெய்ய நடக்கும் வீரனும் ஒன்று
பெருத்த தொந்தியும் பிழைத்த விழிகளும்
முகத்திரு பக்கமும் மூடிய கவிப்பும்
சட்ட திட்டமும் இட்டமும் உடன்வர
நீதியை விளக்கும் நிபுணனும் ஒன்று
மெலிந்து தளர்ந்து விழுந்த முதுகொடு
வெற்றிலைப் பையைப் பற்றிப் பிடித்துக்
கோல்துணை கொள்ளும் குருடனும் ஒன்று
இளமையும் கழிந்தது இன்பமும் தொலைந்தது
வெண்கலம் போன்ற வீரக் குரலும்
குழவியின் இனிய மழலை யாகிக்
குழலின் இசையென அழுதலைக் காணாய்
ஆறும் முடிந்தது அந்தியம் தானே
அதிசயச் சரிதையை அழகொடு முடிப்பது
மீண்டும் குழந்தை மீண்டும் மறதி
பற்கள் சுவைத்தில பார்த்தில விழிகளே.

## 2. திரும்பி நோக்குக

பாரத நாட்டுப் பழந்தமிழ் வீர !
புண்ணெனச் சிவந்து கண்ணீர் விடுக
வறுமையர் எளியவர் வழியிலா அடிமையர்
வெறுமைய ராகிப் பொறுமையை இழந்தனர்
விழிகள் இரண்டும் குழிகள் ஆக
ஏங்கிய கழுத்தும் ஓங்கிய மார்பும்

ஒட்டிய வயிறும் நட்டமாய் நிற்கக்
குளறிய மொழிகளில் உளறி உளறி
வாயுண வற்றுப் பாயுணர் வொழிந்து
சினைப் பிரேதம் செல்லுதல் போல
மேடும் பள்ளமும் காடுந் தழுவிய
ஐந்திணை நிலத்தினும் அவதிப் பட்டு
புதைகுழி செல்லப் புறப்படல் போலப்
பாரத சக்தியின் பழந்தமிழ்ச் சமூகம்
சீர்குலைந் திட்டது திரும்பினீ நோக்குக
சோம்பித் திரிந்தும் சூது புரிந்தும்
இருந்த இடத்தில் இருந்து சுகிக்க
விரும்பி விட்டது வெட்கம் வெட்கம்
உழைத்தலே உயர்வு உடலுக் குறுதி
உழைத்தே உண்பதிவ் வுலக நெறிமுறை
உயர்வும் அளிக்கும் உணர்வும் தழைக்கும்
உரிமைகள் ஒன்றும் உழைத்துணர்க் கில்லை
அதுதான், பாரத நாடு பண்ணிய புண்ணியம்
கடவுளின் கற்பனை கற்றவர் முடிவு
உயர்த்துக உண்மையில் உயர்த்துக தமிழை
உலக மலர்ச்சியில் உன்னுயர் பங்கை
இலகிடச் செய்குவை இடம்படச் செய்குவை
இரவு கழிந்தது பொழுது புலர்ந்தது
கலசம் நிறைந்தது இழையும் வளர்ந்தது
விதியும் அமர்ந்தது வினையும் விளைந்தது
இதனைத் தடுப்பவர் எவரும் உளரோ?



## 3. இறந்த காலம்

இறந்ததை மறக்க இரங்குதற் குரியது
தனித்தது வெறுத்தது விழிக்கரு வருத்தது
சூடு தணிந்தது சொல்லிக் கழித்தது
கதையாய்ப் போனது கனவாய் விழித்தது
திரும்புக நிகழ்வதைத் திரும்பி நோக்குக
புத்தம் புதியது புத்துணர் வளிப்பது
கதிரோன் கதிர்கள் கம்பியின் வளர்ந்து
வானம் சுமக்கும் மலைகளின் கதுப்பில்
புத்தமு தனைய முத்தம் கொடுப்பதை
இன்றுதான் காட்டும் இளமைப் படுத்தும்
இன்றே நன்று நேற்றே மறைந்தது
இன்றைய வாழ்வும் இனிமை நிறைந்தது
புதியநம் பிக்கை பூத்து மணப்பது
இற்றைநாள் வழங்கும் வெற்றிப் பரிசைப்
பெற்று வளர்க பெருமைத் தமிழனே.

## 4. கருணைக்கடல்

கருணை யென்பது வருணனை யொத்தது
மண்ணகம் வளர்ந்து புண்ணியம் தழைக்க
வானுதிர் மழையின் வண்மை யொத்தது
அகமும் புறமும் அருளால் நிறைந்தது
கொள்வோன் கொடுப்போன் கூடிக் களிப்பது
வன்மையின் வன்மை வாழ்வின் உயிர்நிலை

ஆதனத் தமர்ந்துபொன் அணிமுடி சூடிச்
செங்கோற் பிடித்துத் தேசம் புரக்கும்
அரசர்க் கரசனும் அணைய விழைவது
கடவுள் தன்மையின் கண்ணெனத் திகழ்வது
நீதியும் கருணையும் நேர்படும் போதுநல்
அரசர் அறியும் அறிவு தானே.

## 5. வீர தீரம்

திண்மைப் படுக செந்தமிழ் வீர
உண்மையில் உண்மை உரைப்பது கேட்டி
இம்மை வாழ்வு செம்மை நிறைந்தது
விளையாட் டன்று வெறுங்கன வன்று
சலியா துழைக்கத் தொழிற்களும் உண்டு
தூக்கிப் பார்க்கச் சுமைகளும் உள்ளன
எதிர்த்து நோக்குக இறைந்துபோ ரிடுக
கடவுளின் கற்பனை—திடத்தொடும் வெல்லுக
நாட்களைக் கோட்களை நம்புதல் ஒழிக
கையது கட்டி வாயது பொத்தி
மெய்யது நடுங்கின் வெட்கம் வெட்கம்
விரைந்தெழு விடிந்தது நிறைந்தது சக்தி
ஆழ்ந்து கிடப்பினும் அறுத்திடு தளைகளை
போரும் காலமும் புகைந்து நீடினும்
களைப்பை ஒழிக கர்ஜித் தெழுக
வீரப் பாடலும் விளங்கிடும் இன்றே.

# 6. வாலிப வேட்கை

சீர்த்தி மலையின் சிகர முகப்பில்
பார்த்துச் செல்லுக பயந்து செல்லுக
உச்சி வரையும் மெச்சத் தவழுக
கற்பனைக் கனவு காணு தலையும்
அப்பெரு நாள்முதல் அமைந்து விளங்கும்
நாட்டுக் கதைகளில் நற்பெயர் புனைய
வெற்றியும் வீழ்ச்சியும் விளக்கப் படுமால்
அறிவின் சுரங்க அறைகள் அனைத்திலும்
ஆழத் தோண்டி அனைத்தும் பெறுக
இயற்கையின் செல்வம் எங்கும் நிறைந்தது
உயிர்க்குலத் துக்கெலாம் உரிமை யாயது
கடமைப் பாதையிற் கைப்பிடித் தேறுதும்
தருமமே இன்பம் தவழும் உருவம்
உயர்வே அதுதரும் உண்மை அழகு
**மனங்கள்** அனைத்தும் வானவர் பிறப்பு
பரம பதத்தையும் பண்ணுவம் இங்கே
இதயமும் இதயமும் கைகளும் கைகளும்
நெருங்க உறவை நெருக்கி அமைப்போட
மூடிய பனியில் முணுமுணுத் தொதுங்கி
ஆடிய அழற்புறம் அலுத்தே இருப்பினும்
வாழ்வின் சுகத்தை வன்மையிற் பிடிக்கத்
தாழ்வரை யோரம் தனித்தே செல்லினும்
விரைந்து செல்லுக விழைந்து செல்கவே.

# 7. மன்னித்து மற

இந்திர ஜாலம் இயக்கும் மந்திரம்
அன்பாம் அருளாய் ஆசையாய்ப் பிரியமாய்ப்
பொன்போல் உலகம் போற்றி வளர்ப்பது
மெய்வழி வளரும் தெய்வதக் குணமாம்
வீரம் தருவதும் வெற்றி தருவதும்
ஈரம் தருமிவ் வன்பே யாகும்
அயலான் உன்னை அடுத்துக் கெடுக்கில்
புயலாய் எழுந்து புலியாய்ப் பாய்ந்து
பழிக்குப் பழிசெயும் பதட்டம் விடுக்க
மன்னித்து மறக்க மன்னித்து மறக்க
இதய வீட்டில் இருந்தது வளரும்
பறந்து போயின் அறந்தடு மாறும்
மோக தாபம் முற்றும் தணிக்கும்
சோகமும் தீர்க்கும் சோர்வும் நீக்கும்
மன்னித்து மறத்தலை உன்னுயர் குணமாய்க்
கொண்டுவாழ்ந் திடுக கூடிவாழ்ந் திடுக
தோழமை நீளும் தூய்மையும் வாழும்
துன்பமும் துயரும் மின்னலாய் மறைய
இன்பமும் சாந்தமும் இனிதுவீற் றிருக்கும்
பேரறி வாளரிப் பெருநெறி பிடித்தே
வீரராய் வாழ்ந்து விளங்கின ரன்றோ

## 8. தைரியம் விடாதே

நாள்கள் அனைத்தும் கோள்களே யாயினும்
கருமுகில் மூடிப் பெருவழி மறைக்கினும்
தீரத் துடனே செல்லுக எதிர்த்து
புயல்கள் தோன்றும் போய்விடும் உடனே
ஆழம் செல்லுநின் வாழ்வுப் பாதையில்
மேடும் பள்ளமும் மிக்க இருக்கும்
அளித்திடும் சுகமோ நொடிப்பொழு
திருக்கும்
நல்லவை தேர்ந்து நடப்பின் உன்னை
ஞானியர் குழுவும் நாடி அழைக்கும்
சாந்தம் தளிக்கும் சாந்தியைப் பெறுகுவை
சிறைவிடு பறவையின் உறவையும் அடைகுவை
நீஆண் சிங்கம் தீயன அகற்றுவை
ஓயாக் கவலையும் ஒழித்திட முயலுக
கடவுளை நோக்கிக் களிப்புடன் வாழ்க
வெயிலும் நிழலும் விழைவுடன் புணரும்
பரம பதத்தின் பாக்கியம் பெறுகவே

## 9. வாழ்வு

நீர்மேற் குமிழியின் நிலைத்ததிவ் வுலகம்
ஜீவர் வாழ்வோ சிறுபோ தாட்டம்
கருவறை நீத்துக் கல்லறை செல்லும்
காலம் வரைமென் மேலுந் துன்பம்

தொட்டிலி லிருந்து துன்பமுந் தொடர்ந்தது
பயமும் கவலையும் பாய்ந்து வளர்ந்தது
அநித்திய மாயதிவ் வனைத்தும் உண்மை
நீர்மேல் எழுத்து நிறைவுருக் குடுக்கை
ஆயினும் ஆண்மையோ டனைத்தையும்
எதிர்த்து
துன்பம் பொறுத்ததிம் மன்பதை உலகம்
வாழ்வின் தத்துவ மாக்ஷிமை என்ன?
ஏமாற்று பவரின் இடையே கலந்து
நீதியும் ஒதுங்கி நின்று விட்டது
பொன்விளை களங்கள் பொலிசிற் றூர்கள்
குரங்கு மனிதர்வாழ் குகைகளாய் விட்டன
புதுமை பித்தனாய்ப் புன்மைக் குணத்தனாய்த்
தீய வழிகளில் திரும்பின நகர்கள்
அன்பும் நீதியும் அறிவும் அகன்றன
வரையிழி தருநீர் வழியதால் உலகம்
அலுத்த கணவனைக் கவலை யாட்டக்
குடும்பந் தோன்றும் உடம்பும் வாடும்
பெண்மை நீக்கித் தனித்தே இருப்பினும்
வாழ்வுமோர் சாபம் வாழ்வுமோர் தீமை
பிள்ளைப் பேறும் பெறுவர் சிலரே
இல்லை என்போர் ஏங்கி மடிவர்
தம்மிடைப் பிறந்த புதல்வர் தம்முள்
வாழவும் நினைப்பர் சாகவும் நினைப்பர்
இதுவே உலகத் தியற்கை யாயின்
மனைவியும் தேவையோ மற்றும் தேவையோ
ஒருவர்போர் பின்னால் இருவர்போ ராகி

எண்ணிலாப் போராய் மண்ணிடை வளர்வது
மனைவியர் மனத்தை மாற்ற நடிக்கும்
நாடகச் செயலும் கூடகப் பிணியாம்
கடற்புறம் தாண்டிக் களிப்போ மெனினும்
பெருவழி அனைத்தும் பேரா பத்தாம்
மின்னி வெடிக்கும் வெடிகுண் டுகளும்
விண்ணிடைப் பறக்க விரும்பு கின்றன
சஞ்சலக் கடலிடைச் சாந்தி எது?
உடலும் உயிரும் ஒன்றும் காணும்
இறப்பா — பிறப்பா — என்னுமிவ் வினவே
மனத்திடை உருண்டு மடிகின் றதுவே

## 10. அன்பொடு வாழ்க

மானம் படைத்த மன்னனைப் போல
தாழ்மையாய்ப் பெரிய தன்மையாய் வாழ்க
பொறுமையாய்த் தொழில்கள் புரிந்து வாழ்க
ஒருவனைப் பற்றி ஓரகத் திருந்து
மரண பயத்தையும் மாற்றி வளர்க
அவன்செயல் அனைத்தும் அழகொடும்
தவழ்ந்தது
வீணாய்ப் போகும் விருப்பமும் அன்றால்
ஒடுங்கிய மனத்தில் விளங்கொளி காண
உங்கள் உயிரைச் சற்றே உயர்த்துக
துன்ப சமுத்திரம் தொடும்அலை மடிகளில்
வீரச் சுவையும் விளங்க நகைத்திடு
துன்பத் திடையே தோன்றிடும் இன்பமே

## 11. பற்பல வழிகள்

ஒவ்வொரு வனுக்கும் ஒவ்வொரு வழியுள
துயர்வும் தாழ்வுமாய் ஒடுங்கிய தவ்வழி
ஏறிச் செல்லுவோன் ஏறி உயர்வான்
தாழச் செல்லுவோன் தாழ்ந்து திகைப்பான்
ஏறியும் இறங்கியும் மாறுவர் பலரே
ஏறலாம் இறங்கலாம் இவையவர் நோக்கம்
வழியைத் தேடி வகுக்கும் கடமை
மக்கள் எவர்க்கும் ஒக்க முடிந்ததே

## 12. நாளை

நாளை நாளை நம்நா ளாயினும்
வாழ்வும் மனிதன் வாயை மூடும்
வரையும் இந்தச் சிறிய இடத்தில்
நிதமும் நாளை நீள்கின் றதுவே
நேற்றைப் பொழுதுகள் நினைத்துப் பார்க்கின்
மரணப் புழுதியில் மடிக்கும் வழிகளாம்
நம்பெரும் வாழ்வோ நடக்கும் நீழலில்
மேடையில் நடித்து மேலோ ணயினும்
நாடகங் கலைந்த நற்பெரும் போதில்
தேடி நினைப்பவர் சிலரும் இலரே
பயன்சிறி தேனும் பயப்ப தின்றிக்
கோபமும் சாந்தமும் கூட்டிக் கலந்து
மூடர் ஆடிய நாடகம் ஆமே

## 13. எனது வாழ்வு

வானிடு வில்லின் வரவைக் கண்டதும்
என்மனம் எழுந்தே இன்னிசை பாடும்
வாழ்வினைச் சுவைக்கவாய் வைத்திடும்
போழ்தே
அப்படி இருந்தது அமைந்தே இருந்தது
வாலிப மாக்கி வளருமின் னாளும்
அப்படி இருந்தது அழகாய் இருந்தது
படுத்துக் கிடக்குமக் கிழப்பரு வத்தும்
அப்படி அமைக அன்றேல் அழிக
இன்றைய குழந்தையே நாளைய தந்தை
இயற்கை அன்பில் எழும்ஒற் றுமையில்
என்னுயர் நாட்களும் இன்பமாய் வாழ்கவே

## 14. புதிய வருஷம்

புதிய வருஷமும் புறப்படு கின்றது
நாளையும் வெளியிற் காலைவைக் கின்றது
காலையும் மணியை ஏழென அடித்தது
கறுத்தும் சிவந்தும் காட்டிய மலைகளின்
முதுகெலாம் வெண்புகை மூடிக் கொண்டது
விண்ணிடை நின்று விடுதலைப் பாட்டை
வானம் பாடியும் மகிழ்ந்தொலிக் கின்றது
நீண்ட கொம்பொடும் கூண்டினைச் சுமந்து
நத்தைகள் முட்புறம் நகர்ந்து சென்றன

கடவுளும் யோகம் கலந்தே யிருந்தார்
உலகம் அனைத்தும் உயர்கின் றனவே

## 15. இன்று

நீல வானிடை நிலவும் புதுநாள்
கதிர்களை விரித்துக் களித்திடு கின்றது
வீணென வெறுத்திடா தாணெனப் பழகுக
அப்பெரும் அனுதியே அளித்ததின் னுளை
கங்குல் எழுந்ததும் அங்கே மறைந்திடும்
போதென அதனைப் போற்றுவா ரிலராய்
ஆதலின் அதுவும் போதலைக் கொண்டது
மற்றொரு நாளும் வரிசையாய் உதிக்கும்
பெற்றதை விடுத்துப் பேடிநீ யாவையோ

## 16. மரணத்தின் மர்மம்

இரத்தத் திமிரும் இராஜ நெறியும்
சற்றும் நிலைத்திடாச் சாயைக ளாகும்
விதியைத் தடுத்து வெல்படை யாகா
மன்னவர் புஜத்தையும் மரணம் அணைக்கும்
முடியும் கோலும் முறிந்து வீழும்
ஈமப் புழுதியில் எவரும் சமமெனப்
பாறைமண் வெட்டிகள் பரப்பி வைக்கும்
களத்திற் பலரின் கழுத்தைத் துணிக்கலாம்
வளத்தொடும் படைகள் புதுக்கி அமைக்கலாம்

எனினும் நாடிகள் இளைத்துக் களைக்கும்
பிறரைப் பழித்துப் பேசுகின்றனர்
இன்றே நாளையோ இன்னே பின்னே
சாவின் கைகளில் தாவுதல் வேண்டும்
தூக்கு மேடைக் காக்கிய கைதியின்
தொண்டையும் நெஞ்சும் தொட்டிழு
மூச்சென
அடங்கிடும் விளக்கும் அணைந்திடும் அன்றே
கழுத்திடை மாலையும் கறுத்துச் சுருண்டிடும்
வீர திரம் விளம்புதல் ஒழிக
எரிதவழ் மரணம் திரிதரும் இடத்தே
வெற்றி வீரனும் வீழ்ந்துகிடப்பான்
ஆங்கு நீயும் அடைதலும் வேண்டும்
நல்லோர் சொற்களே நறுமணம் வீசும்
நில்லா உலகின் நிலைமையும் இதுவே

## 17. அறிவுக் குணவு

அறிவன் நூற்கள் ஆயுங் காலைப்
பொன்னெனப் போற்ற மின்னும் நயங்களை
மறவா திருக்க மனத்திற் பதிக்க
அன்றியும் வேண்டும் தோறும் மீண்டும் மீண்டும்
நினைத்து நினைத்தே இனித்து மகிழ்க
பார்த்தது மட்டும் பற்று தாதலின்
பேர்த்து நோட்டிலும் பேணி எழுதுக
பிறரின் புலமையைப் பெருக்கித் தன்னதாய்
அறிவு வளரும் நெறியிது தானே

## 18. வெற்றி

தடைகளை உதறித் தாவி உயர்வது
இனிய முகத்தொடும் பகையைக் களைவது
சுத்த மானது தோஷ மற்றது
பயத்தை நோக்கிப் பரிந்து சிரிப்பது
விண்மீன் நோக்கி மேல்நிலை விழிப்பது
அன்பும் வாழ்வும் அளிக்கும் அமுதை
முன்பின் பாராது மொண்டு குடிப்பது
ஜயத்தைக் கருதி மனத்தை வெறுப்பது
தோல்வியை நல்லசந் தோஷமாய்க் கொள்வது
சோகம் துக்கம் துன்பம் சுவைத்தது
பழஉல கத்தையும் புதுக்கி அமைப்பது
உழைத்துக் கிடப்பது ஒடுங்கி விரிவது
வளைந்து நிமிர்வது வாழ்வினைத் தருவது
அதுவே வெற்றி அதுவே வெற்றியே

## 19. மனவீடு

எந்தன் மனமே சொந்த ராஜ்யம்
ஆனந்த மென்பதும் அங்கே உள்ளது
இயற்கையோ பூமியோ இனிதெனக்
கொடுக்கும்
எல்லாப் பொருட்களும் இதற்கிணை யாகா
தேவைகள் சிறிதே யாயினும் என்மனம்
பிச்சை எடுப்பதில் இச்சை கொண்டது

மன்னரா டம்பரம் மாநிதிக் குவைகள்
சன்னத வாழ்வும் சற்றும் விரும்பிடேன்
வெற்றி பெறவும் வேற்றலர் இலையால்
புண்களைக் காணவும் கண்கள் செல்லா
அன்போ டணைக்க ஆரும் இலரால்
இவைகள் அனைத்தையும் சுவைத்து
வெறுத்தேன்
கடற்கரை அமைக்கும் பெருமணற் குன்றெனச்
செல்வமும் சிறந்து திகழ்ந்து நின்றது
விரைவில் ஏறி விழுபவர் பலரே
உச்சியிற் சென்றே மெச்ச இருப்பினும்
காலமுந் தோன்றிக் கறுத்துநிற் கின்றது
உழைத்தே கொண்டனர் பயத்தாற் புதைத்த
இத்தகு துயரை என்மனம் சகியா [னர்
பொறுமை வாழ்வு வெறுமைச் செல்வம்
புதிய மொழிகளின் பூஷண மாகும்
தீய வழிகளில் திரும்புதல் தடுப்பேன்
ஆயவை அனைத்தையும் அகமே அளிக்கும்
சாந்த குணத்தை ஏந்திய மனத்தொடும்
வேந்தனைப் போன்று விளங்கச் செல்லுவேன்
நிறைந்த செல்வரும் நின்று வேண்டுவர்
விருப்பம் எனக்கு மிகுதி அன்றி
திருப்தியும் உள்ளதில் திருப்தி கொள்ளும்
நிறையப் பெற்றவர் குறைவாய் வாழ்ந்தனர்
குறையப் பெற்றதால் நிறைய வாழ்ந்தேன்
ஏழை அவர்கள் யானே செல்வன்
தாழ்வோர் அவரே வாழ்வோன் யானே

தவறு கின்றனர் உதறு கின்றனர்
எண்ணப் படியே இனிதுவாழ் கின்றனர்
அன்னியர் துயரின் முன்னம் நகையேன்
துன்புறுத் திடவும் துணியேன் துணியேன்
உலக அலைகளால் ஒடிந்திடா தென்மனம்
அன்போ டென்றும் அணைந்தே இருப்பேன்
பகைவரைப் பணியேன் தோழரைப் பகையேன்
வாழவும் விரும்பேன் மாளவும் விரும்பேன்
சிலரோ,
சிற்றின் பத்தையே முற்றும் விழைந்தனர்
அறிவை மனத்தால் அடக்கி ஆண்டார்
பொருளையே அவர்க்குயிர்ப் பொருளாய்க்
கொண்டார்
திறமையும் தந்திர முறைமையில் நின்றது
தேடித் திரியும் சீரிய சுகமும்
பொறுத்த மனத்தினுள் புதைந்து கிடப்பது
நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்
அதுவே சுகம்வளர் ஆசன மாகும்
உதிக்கும் அறிவே புதுக்கி அமைப்பது
கைப்பொருள் அளித்தோ மெய்ப்பட உரைத்
வாழ விரும்பேன் மாள விரும்புவேன் [தோ
என்னைப் போன்றும் எண்ணுவோர் உளரோ?

## 20. ஏங்குதல் ஒழிக

என்அரும் உயிரே ஏன்பயம் உனக்கினி
ஏங்கி ஏங்கி இளைத்தனை அழகோ
நீசெய் வினையால் நிகழ்பவை கண்டு
கவலைப் படுதலும் அவலம் அலவோ
துன்பமும் ஆடத் தொடங்கும் போதெலாம்
உன்பெரும் இதயம் ஓடியாது நோக்குக
கடவுளும் உள்ளார் கைவிட மாட்டார்
தினகரன் கதிர்கள் திசையெலாம் பரவி
அழகையும் ஒளியையும் அளித்து விளக்கின
விரைவில் விண்ணகம் கருநிறம் உடுத்தது
மின்னல்கள் தோன்றி வெட்கி மறைந்தன
பின்னும் கதிர்கள் பிழைத்து நுழைந்தன
கலகல வென்னக் கதிரோன் சிரித்தான்
கடவுளும் அங்கே கையைக் காட்டினர்
அரிய உயிரே அழகொடும் வருக
அவனருட் கருத்திலும் அவன்தரும் அன்பிலும்
நவசக்தி பெற்று நன்று வாழ்க
விழித்துளிப் பெருக்கை அழித்தருள் புரியவும்
பயத்தை ஒழிக்கவும் பலத்தை அளிக்கவும்
என்செயல் அவன்செயல் என்ன இணைக்கவும்
கடவுளுந் தோன்றிக் காத்திடுவரே

## 21. திருப்தி

அகத்திற் சுகமும் அமைந்து கிடப்பின்
இயற்கை அனைத்தும் எழுந்தே சிரிக்கும்
காலையி லிருந்து மாலை வரையிலும்
வாழும் நாளும் மகிழ்ந்து கிடக்கும்
அமைதிப் பொழுதை அலைத்துக் கெடுக்க
இயற்கையும் வளத்தை எடுத்துக்கொடுக்கும்
இதயநிம் மதியே இன்பத் துயிர்நிலை
துன்பம் பொறுக்கும் தூய மனமே
மாரியை வசந்தமாய் மாற்ற முடியும்
மயங்கி விழிக்கும் மாலையின் கண்களும்
காலை விழிகளாய்க் களித்து நோக்குமே

## 22. வாழ்வின் கற்பனை

உயிரே! உயிரே! உண்மைத் தோழனே
உடலிற் கிடந்து பெருவிருந் துண்டு
விடுதலை கருதி விடுக்கும் உயிரே
நீயும் செல்வது நீண்ட பாதை
செல்லுக நிமிர்ந்து செல்லுக விரைந்து
சிறந்ததைக் கண்டதும் சிறுமை உறுக
உண்மையே உந்தன் திண்மைக் கவசம்
பருவமும் விரைந்து பறந்து செல்வது
பொய்யென உலகம் மெய்யினைச் சொல்லுக

நீதித் தலங்கள் நெடிது படர்ந்தவை
உளுத்த மரங்களாய் வெளுத்து நிற்கின்றன
கோவிலும் மடங்களும் ஆவலாய்க் கூடி
உண்மையை உணராது உணர்ந்தும் நடவாது
உண்மையைத் திரட்டி உலகிற் கூட்டும்
கோவிலும் மடங்களும் நீதியும் கூடப்
பொய்யென உலகில் மெய்யினைச் சொல்லுக
கொழுத்த செல்வர்கள் அழைத்துப் பிறரை
அடிமைக ளாக்கி அடைகின் றனர்சுகம்
கொடுத்தால் துதிப்பார் கெடுத்தால் படுப்பார்
அனைத்தும் பொய்யென அவர்க்கும் சொல்லுக
அரசாங் கத்தில் ஆள்பவர் பலர்க்கு
நன்மைகள் செய்ய வன்மை படைத்தும்
பகைமையே தங்கள் பழக்கமாய்க் கொண்
டுளார்,
மெய்யினால் உலகம் மேன்மை பெற்றிட
பொய்யினைக் காட்டிப் புகைந்து சொல்லுக
வீரம் வேண்டினர் வீண்அலை கின்றனர்
புகழ்ச்சி ஒன்றே பொருளாய்க் கொண்டனர்
மெய்யினை அவர்க்குப் பைய உரைக்க
உலக நிலைமையை ஒடுக்கி நோக்கின்
உற்சா கத்தில் உணர்ச்சி யின்று
காதல் முழுவதும் காமமாய் மறைந்தது
காலமும் கருதாது கழிந்தோடுகின்றது
மானிட உடலோ மண்ணு கின்றது

ஏனிவை பொய்யென எவரும் உணர்ந்திலார்
வாழ்வோ தினமும் பாழ்படுகின்றது
கௌரவ மென்பது கலங்குகின்றது
அழகோ உருவம் அழியநிற் கின்றது
தஞ்சம் என்பதும் அஞ்சி மறைந்தது
எல்லாம் பொய்மையில் இணங்கிவிட்டன
வீண்விஷ யங்களை விரும்பிய தறிவு
மிக்க அறிவால் மெலிந்த ஞானமும்
சிக்கித் தவித்துத் திகைத்துநிற் கின்றது
விஞ்ஞா னத்துறை மேலெழ உயர்ந்தது
தந்திரம் ஒழியெனச் சமர்த்திடம் சொல்லுக
கடுமை குறையெனக் கடமைக் குணர்த்திடு
வாதம் தவிரென நீதிக் குரைத்திடு
அருளுரு வாகும் அதிர்ஷ்டம் காணின்
குருட்டினை நீக்கெனக் கூறிச் செல்லுக
அநித்திய மென்பதை மனித்தருக் கெடுத்
துரை
ஒற்றுமை யற்றதாய் உறவிடம் உரைத்திடு
நேரம் தாழ்த்தலை நீதிக் குணர்த்துக
பலவகை நோக்கால் கலையழ கொழிந்தது
ஒழுக்கமும் உணர்வும் செழித்து விளங்கப்
பழக்கும் இடங்களாய்ப் பள்ளிகள் அமைக
நம்பிக்கை யென்பது நகர்ந்து விட்டது
நாடும் கடவுளை நாடு கின்றது
உள்ளம் சுரக்கும் உயரிய இரக்கம்.

மக்கள் உளத்தே மறைந்து விட்டது
தருமமும் பெருமையாய்ப் தவழ்ந்திடச் செய்க
உளறிலன் உன்னிடம் உண்மையை உயிரே
ஊறிடின் வாழ்வும் கிளர்ந்து செழிக்குமே

## 23. மனச் சாக்ஷி

என்மனச் சான்றே எனது கிரீடம்
போதுமென் றிருத்தலே புண்ணிய வீடு
இன்பம் திளைக்கும் என்மனம் கருணையும்
அன்பும் மார்பகத் தசைந்து வளரும்
நல்வினைப் பயனால் செல்வத் துச்சியில்
நாயக மாக நடுவீற் றிருப்பினும்
எதிரிகள் நிந்தையாய் இழித்துக் கூறுவர்

அதனால்,

செல்வமும் எனக்குச் சிறுபொரு ளாயது
விருப்பமோ கொஞ்சம் வேண்டுவ தடைவேன்
சக்திக் கியைந்தே எண்ணமும் தாவும்
முத்திப் பதமென் முழுநம் பிக்கை
எச்சமே யாயினும் முற்றே யாயினும்
தினையற வேனும் வினைகளை விரும்பேன்
காசுகள் வேண்டிக் கவலையு மில்லை
உடல்நல மொன்றே திடமுள செல்வம்
மனத்துளே உலகம் மலர்ந்து விட்டது

கடவுளின் கடைக்கண் திருஷ்டியும் விழுந்தது
கொடுமைக் கோபம் கொழுந்துவிட் டெரிய
அடிமையாய் யாரையும் அடக்கிடத் துணியேன்
வாழும் உயிர்களின் தோழனாய் வாழ்வேன்
கோபமே நம்மைப் பாபி யாக்கும்
கொடுநர கத்திற் கூட்டித் தள்ளும்
கண்ணிலா அதிர்ஷ்டம் கைதரு மாயின்
புண்ணிய மனைத்தும் போயொளித் தொழியும்
அதிர்ஷ்டம் அணைத்துமார் பாரத் தழுவினும்
விரைவில் விழலாய் விடுதலை நினைப்பேன்
இங்ஙனம் எண்ணுவேன் ஈசன் திருவடி
தங்கி வாழும் தகுதி பெறவே

## 24. இன்ப வாழ்வு

எங்கே பிறப்பினும் எண்ணிலாப் பிறப்பில்
அங்கே சுகமும் அமைந்தே யுள்ளதால்
தீயரோ டிணங்கான் தீயவை நினையான்
ஆய அகந்தைக் காளா காதே
பயமும் பக்தியும் படரப் பழகின்
கடவுள் அருளின் காவல னாவான்
தரையில் வேர்கள் தாழப் பரவிப்
பூவுங் கனியும் போர்த்து மூடி
விரிந்து தளிர்ந்து விளங்க மாரி
சொரிந்து வளர்க்கும் சொகுசினைப் போலாம்

வேர்ப்பற் றிலாது மெலிந்து பூக்கும்
செடிகள் புயலிடைச் சிதறி ஓடிதல்போல்
தீயவன் வாழ்வும் மாயமாய் மறையும்
அறிவர் வணங்கும் ஆதிநா யகனே
சாந்தியும் சுகமும்நன் மாந்தர்க் களித்துத்
தீயரைக் கருணை சேரா திருக்க
ஞாயமும் காட்டி நல்கினன் அருளே

## 25. தன்னையறிதல்

தன்னை அறிக! தவமும் இதுவே
அன்னிய னிடத்துநீ அறையும் குற்றம்
உன்னிடம் உளதோ இலையோ அறிக
திருத்தி வாழ்வைச் செம்மையாய் நடத்துக
நம்மனச் சான்று ஞாயம் உரைப்பினும்
பெரும்பிழை களையும் துரும்பெனக்
கொள்வோம்
அப்பிழை நமக்குள் தறியாது பிறரைத்
தப்பிதம் கூறிச் சண்டையும் செய்வோம்
தவறிய ஒருவன் அவலமாய் நடப்பின்
கல்லெறிந் தவனைக் கடிவதன் முன்னர்
நல்லவ னுயினை கொல்லென நினைக
உள்ளிருந் தியக்கும் ஒலியினைக் கேட்டி
கள்ளம் அகற்றிக் கதியினைக் காட்டும்
தாழ்மையை உயர்த்தித் தலைநிமிர்ந் தூக்கிய

உன்செயல் உயர்ந்ததென் றுன்மனம்
உரைக்கின்
திருவருள் உன்பால் பெருகி வழியும்
செயற்களே ஒளியின் சிறப்பினைக் காட்டும்
வியப்புற் றெவரும் விரும்ப நடப்போம்
இன்றுநீ திருந்துக நன்றென நடந்தபின்
நாளையுன் தோழரை நன்கு திருத்துக
தன்னை அறியும் தவமும் இதுவே

## 26. சிற்பிகள்

காலவெள் ளத்தின் கரையில் அனைவரும்
வேலை செய்யும் விற்பனச் சிற்பிகள்
அரும்பெரும் செயற்கள் ஆற்றுவர் சில்லோர்
அரும்புங் கவிமலர் அடுக்குவர் சில்லோர்
இழிந்தவை தாழ்ந்தவை என்பதங் கில்லை
எழுந்தவை யனைத்தும் ஏற்றவையாகும்
வீணெனத் தோன்றி விளைபவை யனைத்தும்
ஆணிக ளாக அசைந்திடா தமைக்கும்
கட்டிடம் எழுப்பக் காலமும் உதவும்
நேற்றும் இன்றுமாய் நிலவிய தினங்கள்
ஏற்றும் கற்களாய் இனிதே அமையும்
உருவாய் அணைத்தவை ஒழுங்காய் அடுக்கிச்
சந்துக ளின்றிச் சரியாய் அமைத்திடு
இவைகளை அறியார் எவரும் என்ன
கவலை ஒழித்துக் களிப்படை யாதே

கண்ணுற் காண்பன் கடவுள் என்றே
அன்னாட் சிற்பிகள் அனைவரும் ஆலயம்
கண்ணு யிருந்து கட்டி முடித்தனர்
கடவுளும் உலகமும் கண்டு மகிழத்
திடமுடன் வேலையைச் செய்து முடிப்போம்
பொற்பும் புனிதமும் பூரண மாகித்
தற்பரன் வாழத் தக்கதாய் அமைப்போம்
இன்றேல் வாழ்வும் இழுக்குடைத் தாகும்
காலவெள் ளத்தால் கட்டிடம் குலையும்
மேலும் செல்ல விடுக்கும் படிகளும்
காலும் நடுங்கக் கலைந்து கிடக்கும்
ஆழ்ந்தும் அகன்றும் அடிப்படை யிட்டு
திறம்பட இன்றே திருத்தி அமைத்திடின்
நாளை வேலையும் நன்கு நிலைபெறும்
உலகம் முழுவதும் ஒருபெரும் வெளியாய்
இலகும் விசும்பொடும் இணைந்து கிடப்பதைக்
கண்களாற் கண்டு களித்திடற் கேற்ற
மாடமும் அமைத்து மகிழ்ந்திடலாமே

## 27. உயிர்

உயிரே! அறியேன் உன்னை எனினும்
பிரிவோம் என்பதைப் பெரிதும் அறிவேன்
எப்பொழு தெங்கே எப்படி யென்பது
செப்பொணு ரகசியச் செய்கையே யாகும்
என்னை விட்டுநீ அன்னிய ளுயின்

இப்பேர் உடலம் இணைந்த உறுப்பெலாம்
மைப்போ லாகி மண்ணாய் மடிந்திடும்
வளைந்து நீண்ட வழிகளிற் பறந்தே
எங்குநீ சென்று தங்குவை கொல்லோ
காலக் கடலின் எவ்வலை யுன்னை
மீளவும் சேர்த்து மேன்மையைக் கொடுக்கும்
என்னை வெறுத்தபின் எண்ணம் உணர்ச்சிகள்
தன்னையும் வெறுத்தோ தயங்கு கின்றனை
என்ன ருயிரே இரங்கினன் கண்டாய்
இணைந்து வாழ்ந்தோம் பிணைந்து கிடந்தோம்
இன்பந் துய்த்தோம் துன்பமும் துய்த்தோம்
தோழன் பிரிவோ சொல்லொணாத் துயரம்
ஒருபெரு மூச்சோ டிருவிழித் துளிகள்
உதிர்ந்திடல் கண்டும் ஓடு கின்றனை
என்றுனைக் காண்பேன் கன்றிநின் றனனே

## 28. நூற்கள்

நுண்ணிய பொருட்களை நூற்றிடும் நூற்கள்
புண்ணிய மானவை புவியினுக் கேற்றவை
வாழ்விற் புதுப்புது வழிகளைக் காட்டும்
வாழும் வகைகளை வகுத்துக் கூறும்
அழிந்தோர் தமக்கெலாம் ஆறுதல் சொல்லும்.
மூர்க்கரும் திருந்தும் மார்க்கம் உரைக்கும்
அறிவிலார் தமையும் அறிஞ ராக்கும்
ஞானியர் தம்மை மோனிய ராக்கும்

வேண்டுவார் இடத்தெலாம் விருப்பொடும்
செல்லும்
துன்பத் தழூந்தின் துணையெனத் தோன்றும்
தேவ னுயினும் தீய னுயினும்
யாவ னுயினும் கூவிடின் உதவும்
சுயநலம் வஞ்சனை சூதுசெய் வாரென
அயலெனச் செல்லா தருகிருந் தணைக்கும்
மக்கள் கூறிடும் பக்குவம் என்னுது
மாறிலா தெவர்க்கும் வாய்மையே யளிக்கும்
அரசனுக் குரைக்கும் அவ்வுரை களையே
பிரஜை களுக்கும் பிரியமாய் மொழியும்
வாய்ப்பறை சாற்றுவார் வாழ்விற் புகாது
தனித்துப் பழகுவார்க் கினித்துக் கிடக்கும்
ஒலித்தலை யொழித்தங் கோய்வாய்க்
கிடப்பினும்
பேசும் மொழிகளின் பெருமைகள் காட்டும்
காண முடியாக் கற்பனைக் கனிகளை
நீணிலத் தெவரும் நிலைத்துக் காண
காலங் கடந்த கருணைக் கடவுள்
சீல மனத்தின் சித்திர வடிவைப்
பதிக்கும் விதத்தைப் பழக்கினன் அன்ருே.

## 29. காலம்

உத்தம மாகிய நித்திய காலமே
என்றும் அழியாய் என்றும் அழிவாய்
இல்லாய் உள்ளாய் இறப்பாய் இருப்பாய்

மெதுவாய் நடப்பாய் வேகமாய் ஓடுவாய்
இன்பமாய்த் துன்பமாய் இருப்பாய் எனினும்
எங்ஙனம் போற்றுவேன் எவ்வணம்
தூற்றுவேன்
இராப்பொழு தனைத்தும் இருண்டு கறுத்தன
பகலெலாம் இன்பம் பதிந்து கிடக்கும்
அடிமையும் ஆவாய் ஆண்டவனுவாய்
கொடுப்பாய் அவைகளை எடுப்பாய் மீண்டும்
ஊட்டி வளர்க்கும் உதவும் புவியே
நீட்டிக் கிடக்கவும் நிலைக்கள் அன்றோ
வாழவும் செய்கிறாய் மாளவும் செய்கிறாய்
உன்னை இழந்தே ஓடித் தவிக்கிறேன்
அனைத்தையும் நீயே ஆக்கினை அழித்தனை
அசைந்தனை நின்றனை ஆடினை வாடினை
இருந்தாய் இருக்கிறாய் இருப்பாய் நீயே
வாழவும் செய்வாய் மாளவும் செய்வாய்
தொடர்ந்தே ஞயினும் தூரம் சென்றனை
மின்னலைப் போன்று வேகமாய் மறைந்தாய்
என்னைநின் மாயம் எங்குநான் காண்பேன்
இருந்தாய் இருக்கிறாய் என்பதை அறிவேன்
இருப்பாய் என்பதை எவ்வணம் காண்பேன்
எல்லாம் அளப்பாய் எனினும்நீ அளப்பிலாய்
அனைத்து மாகித் தனித்தனை நீயே.

## 30. கோள்கள்

நாட்களை என்றே கோட்களாய்த் தூற்றினை
மாதமும் வருஷமும் வாரமும் கிழமையும்
தீதுகள் செய்ததாய்ச் செப்புவ தழகோ
முற்றும் உணர்ந்து முடிவுற நோக்கின்
குற்றமும் மக்களின் குழுவையே சாரும்
நாடிப் பார்க்கின் நல்லன நாட்கள்
நல்லவ னாயின் நாட்களும் நல்லன
அல்லவ னாயின் ஆகும் அவ்வழி
ஆதலின்,
தீயவை விடுத்து நல்லோ னாகுக
எளிய வனுகி இன்மொழி பகர்ந்து
களியுற உலகம் களிந்து வாழ்க
இனியநம் தமிழகம் இன்புறற் பொருட்டே



Printed at the Navalar Power Press, Karaikudi.

# ஸ்டார் பிரசுரம்

## பாலக்கரை, திருச்சிறுப்பள்ளி (H. O.)



## எங்கள் அரிய இனிய இலக்கிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1 | அசோக வனம்<br>அ. முத்துசிவன் பி. ஏ. (Hons) | 2-8-0 |
| 2 | கட்டுரைக் கரும்பு<br>வி. ஆர். எம். செட்டியார் பி. ஏ. | 2-0-0 |
| 3 | கவிதை கலை விமர்சனம்<br>சுப. நாராயணன் | 2-0-0 |
| 4 | சலோம் (குமரியின் சபதம்)<br>ஆஸ்கார் ஒயில்ட் (நாடகம்) | 1-0-0 |
| 5 | கல்வி முதலிய கட்டுரைகள்<br>வே. சாரநாதன் எம். ஏ. | 1-6-0 |
| 6 | புராதன நாகரிகம்<br>அ. ராமய்யர் எம். ஏ. | 1-4-0 |
| 7 | நட்சத்திரக் குழந்தை (கதைகள்)<br>மூன்று ஆசிரியர்கள் (கிளேஸ் பதிப்பு) | 1-4-0 |
| | ஆன்டிக் பதிப்பு | 1-8-0 |
| 8 | சிறை அனுபவம்<br>ஆஸ்கார் ஒயில்ட் | 1-4-0 |
| 9 | சிறந்த சிறு கதைகள்<br>ஆஸ்கார் ஒயில்ட் | 1-4-0 |
| 10 | தாகூரின் கவிதைக்கனி<br>அழ. மணிவாசகம் | 0-12-0 |

11 ஒற்றையங்க நாடகங்கள் 0-12—0
கே. ஸ்ரீநிவாஸ் பி. ஏ.

12 கிளிக்காதல் (கவிதை) 0—8—0
பண்டித ரத்நம்

13 இந்திரா (நாடகம்) 2—0—0
கே. ஸ்ரீ.

14 'மல்லிகை' முதலிய வங்க
நாடோடிக் கதைகள் 2—8—0
பி. கோதண்டராமன் எம். ஏ., பி. எல்.

15 தாகூரின் 'கீதாஞ்சலி' 2—8—0
—தமிழாக்கம்: வி. ஆர். எம்.
செட்டியார் பி. ஏ.

16 தமிழ்க்குமரி—பாடல்கள் 2—8—0
பாலபாரதி
ச. து. சுப்பிரமணிய யோகியார்

17 பாரசீகக் கவிஞர் 'உமர் கயாம்' பாடல்கள் 1—0—0
தமிழாக்கம்
ச. து. சுப்பிரமணிய யோகியார்

18 'மேரிமக்தலேனு' பாடல்கள் 0-12—0
ச. து. சுப்பிரமணிய யோகியார்

19 சிந்தனைக் கதிர்கள் (பாடல்கள்) 0—8—0
தமிழாக்கம் : பண்டித ரத்நம்



## இனி வெளிவரும் நூல்கள்

20 கண்ணனும் காந்தாரியும்—
நான்கு நாடகங்கள் 1—8—0
பேராசிரியர்
K. N. சுந்தரேசன். M. A.

21 சிறந்த ருஷிய நாவல் "அன்னை" 6—0—0
மாக்சிம் கார்க்கி எழுதியது
தமிழாக்கம்: ப. ஜா.

22 "சோகப் பாலம்" முதலிய பாடல்கள் 1—8—0
தமிழாக்கம்: திருலோக சீதாராமன்

23 சம்யுக்தா—நாடகம் 2—0—0
ஆசிரியர்: கால்டிரான்—தமிழாக்கம்:
கொடுமுடி ராஜகோபாலன்

24 பாப்பா பாட்டு 0-12—0
பண்டித ரத்நம்

25 ஷெல்லி எழுதிய "சென்ஸி" நாடகம் 2—8—0
தமிழாக்கம்: வ. ஜா.

26. "கொட்டு மழையே"—நயமான இசைப்
பாடல்கள்: 'சாமி சரணன்' 1—8—0





ஓம்